உ

சிவமயம்.

அரிகேச நல்லூரென்ற அரிகையில்

# ஸ்ரீ பஜன மடாலயத்திலெழுந்தருளி விளங்கும் ஸ்ரீ குமாரக்கடவுள் பிள்ளைத்தமிழ்.

இது

மேற்படியூர் சங்கீத சாயித்திய வித்துவ சிரோமணியாகிய

ஸ்ரீலஸ்ரீ

முத்தையா பாகவதரவர்கள் விருப்பத்தின்படி

மேற்படியூர் இராமையர் அவர்கள் குமாரரும்

அம்பாசமுத்திரம் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதருமாகிய

மகா-௱-௱-ஸ்ரீ

அரிகரமையர் அவர்களாலியற்றப்பெற்றுப்

பதிப்பிக்கப்பெற்றது.

லாலி எலக்டிரிக் அச்சுக்கூடம், கருணாநிதி வைத்தியசாலை,

தஞ்சாவூர்.

1915.



உ

சிவமயம்.

# அரிகை பசன மடாலயத்து குமரக்கடவுள் பிள்ளைத் தமிழ்.

## *காப்புப்பருவம்.

### திருமால்.



பாற்கடல் திரண்டுதிலை நின்றதெனுமிரசதப் பரியவே தண்டமோட்டிற்
பரசத்தி குழவியிற் றழுவவந்தச்செழிய பங்கேருகத்தி னங்கை
வேற்கல னெனத்தழுவு வீரக்குழந்தையை வித்தகா சிரியர்க்குமோர்
மேதக்கவடிகளை அரிகைநக ரொளிர்கின்ற விமலவேள் தனைப்புரக்க
சேற்கடல் விழிக்குமுத வல்லிக்கு கந்தவன் சேருநெறிசேற வலருஞ்
செந்தாமரைத்திருவொ டங்கா.னகத்துநெறி சென்றிட்டு மன்றலிட்ட
நாற்கல னவிழ்த்தவர்க்கிட்டு மமையாதுதிரு நளினநிகர் பதவிருக்கின்
றறவாழி யூட்டிவரு பிறவாழி யோட்டியருள் நாராழி காராழியே. (1)

### சிவபெருமான்

பெருவினிறைபொரு ளரியமறைமுறை பொதுவினிடமிடு திருநடக்
கூத்தினர்
புனிதசுரநதி அறுகொடிறகிலை புதியவிளமதி திரிசடைக்கேற்றினர்
புலியினுரியினர் பொறையொர்சிலையினர் பொருதவருமத கரியதட்
போர்த்தவர்
புலைசெய்தொழில்பயில் அவுணர்தொகைபடர் புரமொர்முறுவலி
னெரிபடப்பார்த்தவர்
திருவின்மகிணனு மயனுமறிவரு செழியசுடர்விடு மலையெனத்
தோற்றினர்
திறல்செய்எறுழி யினுலவையரவலர் சிரமொடிவையுர மணியெனக்
கோத்தனர்

* காப்புப்பருவம்.—பாட்டுடைத் தலைவரை திருமால் முதலியோரால் காவல் புரிவிக்கும் பருவம். இஃது இரண்டாமாதத்தில் நிகழ்வது.

திரையினுழிவரு கடுவினெருமறு திவளுமணிநிறை பெறுமிடற் றூற்றினர்
திமிரமடவெழு மருணவருணவ திகரினலர்புரை பதமலர்ப் போற்றுதும்
மருவினலர்தரு நிழலினுறைபவர் மரையினமர்பவர் மறிகடற் பாற்றுயில்
வலவர்பிறவுள வுலகநிலைபெற வாதர்நுதலலர் விழியினிற்றீச்சுடர்
மணியினணிதவழ் கருணைமுழுகிய வடிவினெழில்பெறு மொருவனைத் தூற்றலை
மறிதல்பெறுசர வணமதிடையொரு வனசவமளியில் அமர்திருக் கார்த்திகை
அருமை மகளிரு ளொருகவருண்முலை அமுதுசுவைதரு மறுமுகத் தீர்த்தனை
அடியர் விழைவன வளிசெய் குழகனை அரியதமிழ்குறுமுனிவனுக் கூட்டிய
அதுலவிதுலனை அகிலநிகிலமு மணுவினிடமற நிறைபெறக்கூர்த்திடும்
அரிகை நகருயர் பசனமடமதில் அநுதினமுமொளிர் முருகனைக்காக் கவே

விநாயகர்

மலைகொண்ட சிலையாளர் பொதியதள் தன்னினமென மரீஇக்கரத்துடி யடிகளின்
வாய்த்தனவிணைத்துச் சடைக்காட்டினூடாடி வான்பிறையையிற்ற கோட்டின்
நிலைகொண்ட தென்னட் பொருத்தி யெம்மன்னைதோள் நீள்கழையி னண்ணிமோந்து
நிறைகலவை நீற்றிற்றுதைந்து விளையாடுமோர் நிருமலக்களிறு காக்க
அலைகொண்ட தானவர்தமாருயிரும் வேண்டடியர் அந்தரங்கத்த வாவும்
அமரர்கோனுதங்க மோடவன்மகண்மணத் தாரமு முடித்து நயன
வலைகொண்டெறிந்திட்ட வள்ளிக்கொடிக்குமுன் மரமாகி வார்த்திகனு மாய்
வாலிபனுமாய் நின்ற அரிகை முருகேசனெம் வரதனைப்புரக்கவன்றே.

உமையவள்

விதிமுகஞ்சிகு வையினுறுங்கலை விமலையும்பணி சேடியிற் போற்றல் செய்

 

விது விளங்கிய வதனசுந்தரி விசையையந்தரி மாமறைக்கேற்றரு
விசதைமங்களை யமலைசங்கரி விரைசெய்குங்கும வாரமுற்றேற்றிடு
விபுதையன்பர்தம் இதயபங்கய மிசையெழுந்தரு ளாதரக்கோற்றேடி
கதிர்செய் பங்கய நயனவம்பிகை கனிவிலெஞ்சொலு மாசையிற்கேட்டருள்
கனமுறுஞ்சிக ரவரைமுன்பெறு கனியெனுஞ்சிவ லோகனைப்பாற்பெறு
கவினுறும்பக வதியொர் சம்பவி கனகமஞ்சரி மாலையிற்பூத்தவள்
வடிவளர்திகழ் அபயமுந்தரு கமலநஞ்சிர மீதினிற்சேர்க்குதும்
மதிலுடன்றிரி திரிபுரங்கனல் வழியவங்கச னீறெழக் கூற்றுவன்
மடியவென்றவர் நுதனெடுங்கணின் மணியின்வந்தவி சாகனைத்தீட்டரு
வடிவிலங்கிய முருகனென்மைதையை வரதகந்தனை வானகத்தார்க்கிறை
மகனணுங்கிய சிறைவிடுந்திறன் மலிகுகன்றனை வேதிகைத்தீக்கனல்
அதில்வருந்தகர் தனிலெழுந்தருள் அறுமுகந்திகழ் சேயனைப்பாற்கடல்
அரியுகந்திடு மருகனன்றெதிர் அசுரர்தங்குல வேரெடுத்தோட்டிய
அயில்விடுங்கதிர் வெயில்படும்புய வனகம்பனை ஆரணச்சிர்த்திசெய்
அரிகையம்பதி யிசைமடந்தனில் அமர்தருஞ்செய வேளினைக்காகவே



## கலைமகள்.

வெள்ளைக்கமலத் திடையரும்பி விதிநாக்கொழுகொம்பினிதெழுந்து
விரும்பும் புலவருளப்பந்தர் விரைந்து படர்ந்தங்கவர்கூறும்
கொள்ளைச்சுவை யூற்றெடுத்தகவி குலவக்களியிற் புனைந்தருளுங்
கோலத்தவளமயமான கொடித்தாண்மலர்கண் முடிக்கணிவாம்
பள்ளக்கடலை யுடற்றவுணர் படையாங்கடலை மலர்சொரிந்து
பரவுமடியர் தமைவருத்தும் பவமாங்கடலைப் பாழ்படுத்துக்
கள்ளைக்கவிழ்க்கு மலர்வாகை கடம்போட ணிந்தபுயத்திரண்டு
காமக்கொடிகள் படர்ந்தேறு கற்பத்தருவைப் புரக்கவன்றே.

## அரிகரபுத்திரர்.

பூரணை புட்கலை மாதர்க்கிடத்தவர் பூதரவிற்பரர் மாலுக்குதித்தவர்ப்பழிச்சுதும்
வாரண முய்ப்பவர் மோலித்தலைச்சடை வார்கடன் மெய்க்கவிஞரையிற்றியொர்
ஆரண மெய்ப்பொருள் நீதிக்குறட்டவர் ஆதரவிற்பெறு மாறிற்ப
கிரணைமுற்சிறை மாறக்குயிற்றரி கேசபுரத்தொளிர்வேளைப்புரக்கவே.

காளி

ஐயைமா தங்கியென் டோளிபைரவிநீலி அலகையங் கொடியுயர்த்த
ஆரணி குமாரிசண் டிகைசூரிதிரிசூலி யாமளையாளியூர்தி
வெய்யமுக் கணிகாளிதாருகவிநாசனி வீரிமாலினிமாதரி
வேதாளி சாமுண்டி குண்டலி மகாமாயைமேயகங் காளிகாக்க
மையினலையாழிக்கும் வஞ்சப்பொருப்புக்கும் வாளரிதமக்குமஞ்சா
வன்மையொரு வள்ளிப்பெண்ணுநத் துலவல்செய் வாரிக்குமுலை
மலைக்கும்
நொய்யவிடையாளிக்கு மஞ்சியவள் கஞ்சத்தின் நுவல்தாள் வணங்கி
வேண்டு
நூங்கிசைசெய் அரிகேசபசன கூடத்திலர னுதற்கணருள்
தருமணியையே.

வீரபத்திரர்—பைரவர்.

சினத்தினெழு சிங்கத்தினுரியதளசைத்திட்ட செக்கரிற் சேந்தமேனி
சிறுவிதிமகத்தைச் சிதைத்த வயவெஞ்சிலைச் செல்வனிருதாள்கள்
பச்சை
கனத்தசடைமுத்தலை வேன்முத்தன் மூர்த்திகன காரியாரியைத
நயனம்
கரியபரியூர்திமுத் தமிழ்க்குரிய வடுகனிரு கான்மலர்கள் கருதல்
செய்வாம்
வனத்திலொரு சிறுமிகைத் தினைமாவினுக்குமவள் வாய்மைக்கு
மல்லியிதழின்
வாயூறலுக்கு மலர்வாயூற வாராதமையன்முடியாறினேற
இனத்தமறை யறியாத பதமலர்சிவப்பேற எண்ணில்கொடு
முடிகளேறும்
எந்தைதனை அரிகைநகருயர்பசன கூடமொளிரேந்தலைப்புரக்கவென்றே.

சூரியர்.

அண்டப்பரப்பினிற் கான்றவொரு சான்றினையாயிரங்கதிர்க்
கற்றைசூழ்
அமலமயதைவீக லோகசூடாமணியை யற்பிழம் பழியவான
மண்டலநெறிக் கணோராழிப் பெருந்தேரில் வாம்பரிகளேழினூர்ந்து
மன்னுயிர்களிப்ப வலையாழியெழுமீரா றருக்கரை மனக் கணினைவாம்
விண்டலநெருங்கணிசெயமரசேனாபதியை மேதக்கபசுபதிக்கு
மேற்பதியையறுபதிக்கொருபதியைமகபதிவியன்மகள் விரும்புபதியை
தண்டமிழ் விளங்கரிகை சங்கீதசாகித்ய சபையலங்கார பதியை
தம்பதியினொரு படத்தொளிர்கின்ற பதியினைச்சந்ததம் புரக்கவென்றே.

முப்பத்துமுக்கோடி தேவர்.

மயிலான பரியூருதிட்பத்துவாகினர் மலையேறிநடமாடுபொற்புக்கு லாவினர்
அயிராணிமகளாருநட்புக்குளாயினர் அரிகேசபுரவேலவர்க்குற்ற காவலர்
வெயிலேலுமுடியாளர் எச்சத்துணவயில் வினையாளர் தருநீழல் மெச் சப்பராவுவர்
துயிலாதவிழியாளர் சொர்க்கத்துவாழ்வினர் தொலையாத புகழ்மேவு முப்பத்துமூவரே,

காப்புப் பருவம் முற்றிற்று.

## இரண்டாவது

### செங்கீரைப் பருவம்

தேவாரமு தின்மதுரதரமான தமிழ்நெடு தெய்வதத்தென்றலோடு
சேரப்பிறந்துரக வாரப்பிரானினிது செய்கருணையொத்த பொருநை
பூவரவினீராட்டி யோராறுநெற்றியில்வி பூதியணிசெய்து சோதி
பூத்துப்புறங்கக்கு நற்கனகமயமான புனைகலனணிந்திரண்டு
மூவரவிர்மீனுயர் மூவாதவன்பினிறை முற்றியெதிர்பீரோடெழு
முலைமுகடுபவளமொளிர்வாய்கொளக் கைமலரின்முன்றுனையா லணைத்து
சீவரதமுத்தாடு பூவரததெய்வமே செங்கீரையாடியருளே
தென்னரிகையிற்பசனகூடமொளிர்வேண்முருகசெங்கீரையாடியருளே (1)

கம்பெறிதரங்கக்கரும்புணரி நீறுபடகானிமிர்கிரவுஞ்சமோடு
காரவுணர் நீறுபட ஏறுமுகனுருயிர்கடத்தினிலைவேறுபடவே
வெம்பெறிப்பொரிவிழிகள் சிதறமதமாவெட்டின் வெங்நெளியமன்னிடுபோர்
வீரத்தியற்சூர் கோரத்தமாத்தருவிரைவினிரு கூறுபடவே
உம்பரிறை முடிதாங்க வுவரிவணர் துயிலோங்கவொரு குஞ்சரிப் பெணுள்ளத்
துணர்வாங்க ணீர்க்கவிடு மணமாலையாலிணையிலுலம் பெறுபுயங்கள் வீங்க
செம்பதுமவங்கையிலோர் வேல்வாங்கு சேவகா செங்கீரையாடியருளே
தென்னரிகையிற் பசனகூடமொளிர் வேண்முருகசெங்கீரையாடியருளே (2)

வந்தடுத்தாருயிர்ப் பிச்சையிடுகென்னவே மருமலர்த்தாள் வணங்கா
வணங்கா ரினப்பிணங்காடாக வல்கணம்வயிரூர வாழ்த்தெடுப்ப
இந்தியவினக்கள்வர் வாறுளொழுக்க நெறியிடையிற்று டற்றியடியர்
இனியபோதப்பொருளே வலிதுகவராநிருத விருணீங்கவி தயமலராம்
சந்தமுறுசினகரத் தொருகால மின்றிச்சதாகால பூசைநின்றுள்
தனக்கேதருந்தவர் பவக்காடு தாண்ட நற்மற்போத வினனுதிப்பச்
சிந்தையொடு கொக்கோவெனுங் குருகுயர்த்தவா செங்கீரையாடிருளே
தென்னரிகையிற்பசனகூடமொளிர்மான்மருக செங்கீரையாடியருளே.
(3)

தழைகின்ற நெய்நீவு சிறுமயிர்ப் புன்குஞ்சி தமனியப்பணியினுட
தமிழ்மணங்கமழ்கின்ற செய்யவாயமிர்த வெண்டாரை மடிநனையவாட
விழைபுமிரு மூன்று மதியுறவுபன்னிரு கதிர்கள்மேய் செவிக்குழைக
ளாட
வேன்முதற்றங்கு கைத்தலமாட வாரநிரைமேன் மேலுமார்பினுடக்
கழலினெடு காப்பணியணிந்து செந்தாமரைக் கவின்பரவுகழல்களாடக்
கட்கடையெழுந்துலவு கருணைப்ரவாக நிலைகருதடியர் களியினுடச்
செழிபொழிலுடுத்த வரிகேசபுரவர்சனே செங்கீரையாடியருளே
தேவருயிர் வாழவருள் பாலமுருகேசனே செங்கீரையாடியருளே (4)

கருதரிய திரிவிதப் பொழுதுவரை யறைதாண்டிகற்பனை கடந்துகரை
யிற்
கனவண்டகோடிகளினிலை தாண்டிமண்டலக் கனல் கனலநாப்பணின்று
பொருந்துமிரு நாலுவகை யோகநிலைகைபோய புனிதரிதயங்கடந்து ·
புனையாயிரச் சுருதியிறுதிபெறு சொல்லோடு பொருளுங்கடந்து நெடி
யோன்
துருகணனெனும் பெரியர்காரணங்கடந்து மேற்றுரியங்கடந்து நாளுஞ்
சொற்பொருள்பழுத்த விசையற்புதத்தமிழ்மாலை சூட்டுவார்நெஞ்சு
கடவா
திருமலர் வணத்தருளின் முழுகிய பதத்தழக செங்கீரையாடியருளே
தென்னரிகையிற் பசனகூடமொளிர்வேன் முருகசெங்கீரையாடி
யருளே. (5)

சின்னஞ்சிறுத்தநின்குக்கியுட்கல்கண்டு சிந்தனைநெகிழ்ந்த தாயர்
திறவாதுபயனுதவு செப்பிணையின் மேற்சிறிய செப்பொன்று
சேர்த்தலென்ன
வன்னஞ்சிறந்தமுலை துவர்வாய் சுவைப்பநின் வயிறுற்றுவிப்பமற்று
மந்தரமெனும் பெரிய மாதிரமும் வாசுகியுமாமதியோடாமைமாலுங்

கன்னங்கருத்ததிதிமைந்தரொடு விபுதர்பாற் கடலுமிவராஞரவாராக்
கனிவாயினினிதூறுகுதலைய முதாலவர்தம் கருத்தினை நிரப்புமதலாய்
செந்நெலரிகேசபுர பசனகூடக்குழக செங்கீரையாடியருளே
தேவசுப்பிரமணிய சேயசுப்பிரமணிய செங்கீரையாடியருளே. (6)

வேறு.

மலமில் தபோதனர் இதயசரோருக மன்றுநின்றுடு
வரதர் விலோசன மணியெனவேவரு மைந்தாசிந்தூர
திலக கிராதர்பொன் மருவுபுயாசல செங்கேழ்சிங்கார
செருவி லொர்சூருட லுருவியவேலவ சிந்தோரந்தேக
நிலமக ணாயகர் மருகபராபர நின்றுளென்றேதன்
நினைவுறுவார்பவ வினையறவேயெதிர் நின்றுள்குன்றுத
அலகில் குணாமிர்த சலதிநிராகர செங்கோசெங்கீரை
அரிகை மடாலய முருகபடாசன செங்கோசெங்கீரை. (7)

மகபதி தழைதர அளிமழைசொரிதரு மஞ்சேநெஞ்சார
மருமலரிடுபவர் மனமலருணவரு வண்டேஅண்டாத
ககநிசி சரரதுவ லமெரி செயவெழு கங்கேசெங்கானம்
கனிவினி லிசைதரு மவர்சிகு வையினிகழ் கண்டேகொண்டாடும்
குகசது விதகதி நிறைகனி நிமிர்தரு கொம்பேவெம்பாத
கொழுசுடர் பலவொரு புடைதொகு தரல்புரை குன்றேநன்றுரும்
செகமகிழ் சரவண பவகலி யுகவர செங்கோசெங்கீரை
திருவரி கையிலொளிர் பசனச பையினிறை செங்கோசெங்கீரை. (8)

மாடக முற்றிய வீணை வலத்தவர் கூடினர் சங்கீத
வானமிர்தப்பெரு தாரை நிரைப்பவர் பாடினர் மன்றுடு
நீடிய நிற்குறு காதை வகுப்பவர் நீடினர்நெஞ்சார
நேரியபத்திமை யோர்களிபற்றினர் ஆடினர் நின்றார் கைத்
தாடணமொத்தொரு கோடனை கொட்டினர் நாடினர் தங்காது
தாரணிமொய்த்திடு பாகவதக்குல நேடினநஞ்சாருஞ்
சேடனடுக்கிட வேறுமயிற்குக ஆடுகசெங்கீரை
சீரணிமிக்கரிகேசபுரக்குக ஆடுகசெங்கீரை. (9)

சலமுடனெதிருமொர் களிறடர்கரிமுகர் தம்பீ. அம்பாரூர்
தாழியில் வந்தவர் மேவவருந்தமிழ் தந்தாய் பந்தான
கலமுலைமான்மகள் இதழணி பெறுசுவை கண்டாய்விண்டூரும்
காரி குமாரியை ஆரெரி காணவு கந்தாய் வெந்தாபம்
விலகரு சிறையினின்றுயர் நிலைசுரர்புக விண்டாய் வண்டாடு
வில்லமணிந்தவர் கொள்ளவொர்மறுவைந வின்றாய் உன்றேழர்
சிலதியரடியவர் பரவினர் அறுமுக செங்கோ செங்கீரை
செல்வவளத் தரிகேசபுரத் தவசெங்கோ செங்கீரை. (10)

செங்கீரைப்பருவ முற்றிற்று

செங்கீரைப்பருவம்.—இனியமதலைச்சொற்களைப்பேசும் பருவம். ஒருகாலை மடக்கி ஒருகாலைநீட்டி இருகைகளையுநிலத்திலூன்றித்தலை நிமிர்ந்து முகமசைய ஆடுதலே இப்பருவத்தின் செய்கை. நீர்-சொல்.—ஐந்தாமாதத்தில் நிகழ்வது.

## மூன்றாவது.

### தாலப் பருவம்.

அல்லிற்பழுத்த கருமள்ளர் அலையிற்பழுத்த முத்தின்வித்தை
ஆழவிதைப்ப வயிரமணி அரும்பினரும்பிக் கோமேதம்
புல்லுநிறத்தி னேரொன்றாய்ப் பொருந்துகுருந்தினித்திலங்கள்
புனைவித்தன நீர்த்துளிக்குலங்கள் பொலியவளர்ந்து மரகதத்தை
வெல்லப்பசிய நிறங்களுல விளங்குஞ்சிறு புன்னாற்றுநிலை
விபுலமனை மென்மடிமீது விண்டுகிடக்கும் விதமெனவே
சொல்லக் கவினாரரிகைநகர்த் தூயோய்தாலோ தாலேலோ
சூரன்குல வேரறுக்கவந்த தோன்றால்தாலோ தாலேலோ. (1)

அருமைக்குழந்தாய் வருகவென அலர்க்கைமலர்த்து மடவார்தம்
அறியாக்குணத்தின் சிறுமைதனை அகத்தினடக்கி முகந்திருப்பி
கருமைக் குழலாருமையாடன் கரும்புவிரும்புகவின்றோளை
கமழுஞ் சிறுகையாற்றழுவி கலுழுங்குறிமா முகங்காட்டும்
இருமைக் கிரங்கியணைத்தேந்தி யிருள் தீர்முகத்தின் முகஞ்சேர்த்தி
இனியமொழிகள் தொடுத்துமுத்த மிதழினூட்டிக் கொளுமன்பின்
பருமைகடக்கப் புரியுமொரு பச்சைக் குழந்தாய் தாலேலோ
பண்பால் அரிகைப்பசன சபைப்பதியோய் தாலோதாலேலோ. (2)

கொள்ளைப்புலவுக் கருஞ்சேற்றிற் குறுகிக்குடையு நாங்கூழைக்
கொத்தியுதறும் புலிங்கமெனக் கொண்டலுருண்டு புரண்டலறத்
தொள்ளையெயிற்று விடப்பகுவாய் சூட்டுமுடி யாயிரவரவைத்
துண்டத் தெடுத்தங்கலைத் தலைத்துத் துவசத்திருக்குஞ் சிவந்தசிறை
வெள்ளைக் கழுத்துக் கலுழன்மிசை வீசியெறிந்தங் கவர்தொடுக்கும்
விதர்ப்பினகைத்தவ் விருவரையும் வீழவடர்த்த மீளுமயிற்
புள்ளைநடத்துமறுமுகத்தெம்புத்தேள் தாலோதாலேலோ
பொன்னூரிகை மடாலயத்துப் புனிதா தாலோதாலேலோ. (3)

வில்லார்கருங்கைச் சினவேடர் விளைபூம்புனத்திலமைத்தவிதண்
மேனின்றிலகு பசுங்கிளியை விரும்பி வலத்தும் சலத்துமிகு
செல்லார் மதவெண்கரிவளர்த்த தெய்வக்கிளியை இடத்துமுறச்
சேரவமைத்துங்கிளியாசை தீராதமிர்தமயமாகிக்
கல்லார்மனமும் கசிந்துருகக் கனிவித்தருளுந்திருப்புகழைக்
கருணைக்கழகாய் நவின்றருள்செய் கவினாருணகிரியென்னுஞ்
சொல்லார் கிளியுங்கரத்தமைத்த தூயோய்தாலோதாலேலோ
சூரன் குலவேரறுக்கவந்த தோன்றல்தாலோதாலேலோ. (4)

கற்பின்மடவாருடற் பொற்பின் காந்திக்கிளைத்த சேந்தளிர்
கண்கட்குடைந்த வடுக்குலங்கள் கச்சைக்கடிந்து கிழித்தெழுந்து
பொற்பின்சிகரமலைக்கெதிரும் பூணார்முலைக்கும் பேணுசனி
பொருந்தாவெனக் கண்டிலையிழந்து பொருந்தும்பொழுதுவானேக்கி
அற்பினெடிய சினைமுனையில் அரும்புமரும்பையங்கசவேட்
கம்பாயளித்தங்கவர்பிரிவின் ஆடல்காணுமாம்பிரங்கள்
இற்பின்புடை சூழரிகை நகர்க்கிறைவா தாலோதாலேலோ
இமையோர் மகளின்மான் மகளினிடத்தோய் தாலோ தாலேலோ. (5)

வாசந்திகழ்மான் மதக்கலவை மயங்கக்காஞ்சி யிடைதுவள
வரைவாயொழுகிமகிழ்வெய்தி வளர்மாமுலைப்பூமிசையோங்க
வீசுந்திருக்கை வளைகலங்க வெண்முத்தாரம்பலவெய்தி
மேனிவனத்திற் பொலிவாக விரைந்து கீழ்பான்முகநோக்கி
ஆசைக்கணவன்றிருத்தோண்மேல் அணிகூர்மணமாலிகை யணிவா
ளாகும் பொருநைப்பிரவாகத் தமராவதியினெதிரரிகைத்
தேசின் மணிசேர் மடாலயத்திற் செவ்வேள் தாலோதாலேலோ
சிவனார் மரபுதழைக்கவருசிறுவா தாலோதாலேலோ. (6)

வேறு.

நிலையிதழ் மறையவன் மறுநிறை தருபொருள் நேராயோராதே
நெறிகெட வவனது முடிமிசை புடைதரு நீதாவாராரா
முலைமலை வனசர பொருமக ணசைதரு மோகாமாபோகா
முனமிறை யவரரு ளகமுயர் பொருள்தெரி மூகாமூவாதோர்
வலிகொடு மகமொளிர் கனல்வரு மசமுகை வாகாதேனீபா
வரையுயர் சிலையணி தருபவர் புயமலை வாசாதேவேசா
தலமுய ரரிகையி லொளிர்பட முறைபவ தாலோதாலேலோ
தமிழணி யணிபவ சரவண பவகுக தாலோதாலேலோ. (7)

நிசமறு வாழ்விது சுரநெறி யேகொடு நீறுநீறுதே
நினது சரோருக பதமலர் நீழலை நேர்வாநேராயோ
கசிவொடு நீதுணை யலதிலை மேயினன் காவாயோகோனே
கவலையின் மூழ்கிய வடிமையை யோர்முறை காணுயோ நீதான்
விசன மதாமிரு வினைகெட நீவுவர் வேறுராவாரே
விரிகட லோடுயர் பருவரை நூறிய வீராவேலோனே
சசிதவழ் மாளிகை அரிகை விசாகனே தாலோதாலேலோ
தமிழணி வார்பெறு மருணிதியானவ தாலோதாலேலோ. (8)

பன்னிம யமலையொர் கன்னியின் விழியொளிர் பாவாயோவாதே
பன்னிய ரிருவரி னுண்ணிறை யமுதுகு பாகோநாகோரார்
கன்னலி னிசைநவி லன்னவர் பெறுமுயர் காவேவேவாதே
கன்னல்செய் வினையன றண்ணென வருள்சொரி காரேசீரோடே
மின்னிய சிவமத நன்னிலை கொளவளர் வேரேமூவாறு
விம்மிய கதைபிற தொன்மர முறுதியின் வீழ்தேவாழ்வேகூர்
தன்னிக ரரிகையி னண்ணிய வறுமுக தாலோதாலேலோ
சன்னிதி தொழவரு ணன்னிதி தருகுக தாலோதாலேலோ. (9)

சுருதியெனும்பல புலவர்வணங்கிய தூயாசேயோனே
சுடரணிதங்கிய மலைநிரையொன்றிய தோளாவேளோய்பே
சருசமயங்களின் மருவநிறைந்தருள் தானே நேராவாய்
தமிழணிதந்தவர் உளநிலையொன்றிடு தாளாநாளாறே
பருமுலைதந்திட ருசியினயின்றவொர் பாலார்வாயானே
பனிமலை நின்றெழு சுரநதிதஞ்சிறு பாலாசீலாநீள்
தருதருமஞ்சரி அரிகை புரந்தவ தாலோதாலேலோ
தடமலையெங்கணு நடனமிடுங்குக தாலோதாலேலோ. (10)

*தாலப்பருவம்.—தாலாட்டுப்பருவம், தாலாட்டல் நாவசைத்தல். இது எட்டாமாதத்தில் நிகழ்வது;

தாலப்பருவ முற்றிற்று.

## நான்காவது

### சப்பாணிப் பருவம்

எதிரற்றதெய்வத்திருத்தொண்டருள்ளூறு மின்பநீர் விழிகள்சொட்ட
எல்லைதீர்பரவசத்தரிதெய்துரோமாஞ்சமினிதுபோர்த்துடலின்முட்டப்
பிதிருற்றபான்முலைக்கைத்தாயரங்கிங்கு பெயராதுன்மாமைகட்டப்
பெரிது நின்றேழமைப் பிள்ளைக்குழாங்கணின் பின்னர்கெக்கெலிகள்
கொட்டக்
கதிருற்றகனவண்ட கோடிப்பரப்பெலாங் கட்டியத்தொனிகளெட்டக்
கடவுளருமாலயனு மேனையருநின்னருட்கட்கடையினரிதுகிட்டச்
சதுமறைமணக்கு மரிகேசபுருகேசனே சப்பாணி கொட்டியருளே
தமிழுக்கு வள்ளியிதழமுதுக்கவாவுளாய் சப்பாணிகொட்டி யருளே.
(1)

ஆன்றதுருவஞ் சுலவு கோளினேர் மாணிக்க ஆழிநிரை பளபளப்ப
அடரஞ்சியரதனக்குலந்தழூ உங்காப்பணியொடந்துகங்கலகலப்பக்
கான்றகதிராயிரக் கற்றைபொருந்திருவுருக்கவின்கலனிருள்பிளப்பக்
கனமறைகணுறு செங்கனி வாயினூறலால் கலையினிலைமடிகுளிப்ப
ஊன்று சிறுநகைபூப்பவுறுவர்தொடர்பவநீப்பவுன்னிடையர் மன்னி
யார்ப்ப
ஒழுகுதேனவிழ்தழ்ச்செந்தாமரைக்கு நிகருள்ளங்கை சிறிதுசேப்பச்
சான்றவர் தழைக்குமரிகேசபுரவாசனே சப்பாணிகொட்டியருளே,
தமிழுக்கு வள்ளியிதழமுதுக்கவாவுளாய் சப்பாணிகொட்டியருளே.
(2)

சுருதியுறு துணையாக மருவியெழுவகையான சுரநிலைவழாது கீதச்
சுருசிகண்டோவியஞ் சிலைதலைதுளக்கு நயசுயகான வமைதியேற்பக்
கருது கருமார்ச்சனைத்தோற்கருவியார்த்தவிசை கஞ்சமரனெஞ்சிய
வெலாங்
கதுவசெந்தேனெழுக்கார்குரற் குப்பியங்கலவலவர் நீவல்வாய்ப்ப
உருகிய மனத்தவையர் பரவசமழுத்த விடுமொத்தகைத் தாளமேய்ப்ப
உன்னரியகாதைநல்லிசை பெறவிசைத்தவருஞற்று நர்த்தனம
தார்ப்பத்
தருமநிறை யரிகேசபுரமுருகநாதனே சப்பாணிகொட்டியருளே
தமிழுக்கு வள்ளியிதழமுதுக்கவாவுளாய் சப்பாணிகொட்டியருளே (3)

அணியாடவர்க்குரிய வடிவிற்கிளைத்தன மருவமெய்தியது மீண்டிங்
கமைவுடைத்தினியங்ஙனேகுதுமெனத்தனேர் ஆம்பல்மிசைதாம்
பசியநீர்
மணிப்பரியின்மிசையிருந்தளவின்முறையுந்திட்டு மற்றவைகள்
பொற்றேடியர்பூண்
மாணிக்கமணிகக்குசோதிக்குமாங்கவர்கள்வாய்மலரின் வேய்ங்
குழ்வினோர்
பணிமிக்ககிளவிக்கு மஞ்சிப்பிறக்கிடல் பார்த்துத்தெனர்த்தரதமேல்
பஞ்சபாணக்குரிசிலாரோகணித்துலவு பன்மாட கூடமறுகாற்
றணியாதவளமேவு மரிகைநகர்வாசனே சப்பாணிகொட்டியருளே
தமிழுக்கு வள்ளியிதழமுதுக்கவாவுளாய் சப்பாணிகொட்டியருளே. (4)

நெட்டைக்கடற்கரைகளமற்றிட்ட தென்னசெங்கீரினிலை வாரிகூட
நெடிமுடைக்காரவுண ருடைதலைக்கூடுபல நெட்டிக்கவர்ந்துநெடிய
செட்டைச்சடத்தெருவை மட்டற்ற புட்டமிவை தெட்டினுயர் வட்ட
நீடத்
திட்டைப்பிணத்தட்டினெட்டிமுட்டக்கூளி திட்டமொடு நட்டமாட
குட்டைத்தடப்படப்பாரிடப் படைசகடை கொட்டிடப்பரணிபாடக்
கொட்புற்ற சூருட்கியோடச் சமத்தங்கை கொட்டிட்ட கைச்சேவகா
சட்டைச்சடைக்காடர் நெற்றிநாட்டத்துமணி சப்பாணிகொட்டி
யருளே
தமிழிசை படர்ந்தவரிகேசபுரவாசனே சப்பாணிகொட்டியருளே. (5)

அருளாழிதரவந்த வமிர்தமதியானமுக மசையாதசைந்துலாவ
ஆங்காங்கணினியபன்னீர்த்துளியினேர்த்தவேர்வரும்பாதரும்பநெடிய
மருளாழிமார்தளவில் சௌமியத்திருமேனி வளையாது வளைவுகாண
மாடுற்ற வெம்மனோர் மற்றுந்தவற்புத மகிழ்ந்து காணாது காண
உருளாழியாதவர்க்கலர்தாமரைத்துணைகளொன்றோடொன்றுறவா
ட்ல்போல்
ஓங்காமலோங்கியகை வாங்காமல் வாங்கவருமோசைகேளாது கேட்பச்
சருவாகமத்தினுயர் பொருளாய்விளங்குகுக சப்பாணிகொட்டி
யருளே
தமிழிசைபடர்ந்த வரிகேசபுரவாசனே சப்பாணிகொட்டியருளே. (6)

மட்டிட்ட வட்டத்தினல்லி புல்லிச்செய்ய மாயனுருந்தியூடு
வந்திட்டு மற்றவரொர் தந்தைதாயிறையென்னவாய்த்திட்டுமன்னுல
கெலாங்
கட்டிட்டு முகநான்கு பெற்றிட்டு மறையாதிகலைகளெட்டெட்டுமெல்
லாங்
கற்றிட்டு மாசறக்கேட்டிட்டு மனுபவங் கண்டிட்டும் வண்டோலமோ
டொட்டிட்ட புண்டரிக வொண்டொடியொர்மனைநாவிலொன்றிட்டு
மோமமநுவின்
உள்ளிட்ட பொருளன்றியுள றிட்டவூத்தைவாயோரொட்டுநாட்டத்தனை
தட்டிட்டடக்கிமுடி குட்டிட்டசெங்கைகொடு சப்பாணிகொட்டியருளே
தமிழிசைபடர்ந்த வரிகேசமுருகேசனே சப்பாணிகொட்டியருளே. (7)

வேறு

கலசத்திடைவரு முறுவர்க்குமையருள் கட்டியநற்றூரிற்
கவின்முற்றெருசிறு கனியிற்புகழொரு கற்பிதமுற்றூள்பின்
மலையத்தலைநிமிர் பொதியத் தலமிசை மற்பெறநட்டேகி
மடுவிற் றலைபடு மருவிப் பெருநதி வற்றறவிற்றேடி
முலைவிட் டெழுதரு பயசிற்றலையுயிர் முற்றுறவிற்போற்றும்
முதுமைப் பொருநையின் வளமிக்குயர்தரு முத்தமிழ்வித்தார
குலமெச்சரிகையொர் பசனைச்சபைமுதல் கொட்டுகசப்பாணி
குமரிக்கௌரியொர் வரபுத்திரகுக கொட்டுகசப்பாணி. (8)

அரவிற் றுயில்பெறு கருமைப்புயலயன் அற்பினடுத்தார்கள்
அமரர்க்கிறைவரு மரிதத்தலைவரும் அப்புறநிற்றூர்வெண்
பரவைத் திருமகண் மலரிற்கலைமகள் பற்றினரிப்பால்விண்
பரவச்சசியெழு கனிகைச்சிறுமியர் பக்கல்வளைத்தார்மண்
இரதத்தெழுதரு வரதப்பெருமுதல் இக்கணம்வைத்தாட
இமயக்குலமகள் தழுவிக்களியுடன் இத்தலையுற்றூர்நெற்
குரன்முற்றியவயல் அரிகைக்குருபர கொட்டுகசப்பாணி
குமரிக்கௌரியொர் வரபுத்திரகுக கொட்டுகசப்பாணி. (9)

கூலநெடுங்கடல்வேல்துவவிட்டவ கொட்டுகசப்பாணி
கோழிநெடுங்கொடி வாழியுயர்த்தவ கொட்டுகசப்பாணி
கூலவதிக்கொரு பாலகநாயக கொட்டுகசப்பாணி
கோயிலெமக்குள மாயினை சேயினை கொட்டுகசப்பாணி
கோவிச்சுரர்தமைவான்குடிவைத்தவ கொட்டுகசப்பாணி
கோமளவள்ளி யவாவுளனைவ கொட்டுகசப்பாணி

கோலச்சிகியுகை வாகனமானவ கொட்டுகசப்பாணி
கொழுதமிழரிகையின் மகிழ்தருமறுமுக கொட்டுகசபாணி
சப்பாணிப்பருவம்—இரண்டு கைகளையும் ஒருங்குசேர்த்துக் கொட்டும்பருவம்
இது ஒன்பதாமாத நிகழ்வது
சப்பாணிப்பருவம் முற்றிற்று.

## ஐந்தாவது.
## முத்தப்பருவம்.

பாவைப்பரப்பினலை தாவுதரு மீனமும் பணிலமுடனிப்பிரத்தும்
பங்கசமுமங்குதவு தரளங்கண் மெத்தப் பயப்பட்ட முத்தமன்றே
வரைபட்ட கணிவேரல் வாளரவுபே ரேணம்வலிமை பெறுமுசலிதம்மில்
வருகின்றதரளத்தை யுலகிடத்தார்பெரியவரைபட்டமுத்தமென்பர்
கருப்புக் கணுக்கணெல் தருகின்றதரளங்கள் கண்டம் படுக்குமுத்தம்
கதலிபகமுத்தங்கள் தடைசிறைகள் பட்ட தாய்க்கருதுமுத்தங்களதனல்
ஒருமருவு நவிலுதற் கில்லாத செவ்வாம்பல் ஒள்ளிதழின் முத்தமருளே
ஒளிமாட கூடவரிகேசபுரவாசனே ஒளிர்வாயின் முத்தமருளே (1)
வேய்முத்த நயனத்து மணிபெற்றமுத்தமே விமலவமலக்கங்கையின்
விரிகின்ற பொற்றாமரைக் கண்விளை முத்தமே விபுதபதி விரகினிட்ட
காய்முத்த மாலையணிதோள் வித்தவானகக் கடவுளர்தம் முடிகண்மீது
கதிர்விட்டெறிக்கு மணியான மணிமுத்தமே கவின்முத்த யானமுருஞ்
சேய்முத்தமேமுத்தலைச்சூலபாணிமுன்செய்வித்தபொருண்முற்றுரை
தென்முத்தமிழ்ப்புலவரிதெனத்தெளிப் பனிமிர் சிரமுன் றுளக்கலன்றி
வாய்முத்த மருளாத தூயமுத்தையனே மலர்வாயின் முத்தமருளே
மான்மகளருத்து தினைமாநாறு கின்றநின் மலர்வாயின்முத்தமருளே (2)
தந்திறத்துறுநிலைமைகருதாத விரைமேவு தாமரைக் கிழவனார்முன்
தருக்கிமநுவுக்குரிய பொருள்வேறு தந்திடத்தடிந்து சிறைபுகவிருத்திச்
சிந்துரமுதற் கடையெழும்புவரையாவுரைசெய் சிவசரவசரமாதி
செய்வகைதிருந்தச் சிருட்டிக்கு நின்னொரு தெய்வதத்திறமை காண்
பான்
சந்திரச்சடையாளர் வந்துவந்தன்போடு தழீஇப்புயவரையிலேற்றி
சாமிநீயம்மநுவினிறை பொருளையென்னோர்செவி சாற்றெனச் சிறி
துதாழ
மந்திரமதுபதேசமுங்கவருள் செய்தநின் மலர்வாயின் முத்தமருளே
மான்மகளருத்துதினை மாநாறுகின்றநின்மலர்வாயின் முத்தமருளே (3)

ஓங்கலைக்கடலிப்பிரத்துமீனங்கமல முடுபதிமடந்தை மிடறோ
டுடும்புகருமேக னெல்வலாகமலர்பூகவரிபுரகமதயானை யேனம்
தாங்களவிற ரளத்து வாங்கரியமணமேது தமிழினிய சுவைகளேது
தாழாதகுணமேது கூடாது குறையாது தழைதன்மையேது மேலும்
ஆங்கவைகணிறை படுங்குறைபடுந்துளைபடுமெங்காடி தூங்கினாலும்
அலைபடும் விலைபடுமணியுராய்க் குறைபடுமெம் முறையடாமலென்னுங்
தேங்கலுழு மாம்பலணிவாங்கிச் சிவந்தநின் திருவாயின் முத்தமருளே
திருவளருமரிகை நகர்பசனசபை நாயகா திருவாயின் முத்தமருளே
(4)

மனநின்ற கனயோக மலயமுனிவர்க்கவர்தமாதவப் பேற்றினுற்றுல்
வானமுதமானநற்றமிழாதியுபதேச மானவுரை செய்திட்டநீள்
வனநின்ற சினவேடர் சிறுமியிதழமுதூறன்மாந் திட்டகூர்ந்துறுநீர்
மடியாட விட்டிட்டவொருசூரினெதிரேற்று மலைதல்விளையாட்டி
னுன்னி
சினநின்ற சிறுமுறுவல் பூத்திட்டவோரிருவர் தேவர்தொழ வஞ்ச
லென்றே
செப்பிட்ட செப்பரிய செப்பினலராம்பலிற்சேந்திட்ட வாழ்ந்த பொரு
ள்கூர்
கனநின்ற மறையிளங்குதலைகட தும்பிட்ட கனிவாயின் முத்த
மருளே
காயகவிலாசவரிகேசபுரவாசனே கனிவாயின் முத்தமருளே. (5)



வேறு

ஆழ்ந்தபொருட் செந்தமிழ்கேட்ப ஆற்றுப்பரன் மேற்செலற்கஞ்சி
அனல்கூர் கமரின்வீழ்தாவ மரிதினெதுங்குஞ் சுரத்தினெறி
போழ்ந்து விரைந்து செலுமெதிரிற் பொய்யாமொழியை வழிமடக்கிப்
புகலோர்கவி வொண்கடம்பணிந்த புயத்தார்க் கெனக்கைத்தடியோச்ச
தாழ்ந்தங்கவனுங்கடநடுக்கந்த விர்ந்துபொன்போலெனத் தொடங்கிச்
சாற்றுங்கவி சேட்டினிதுவந்து தானுமவன் கேட்டிடவுவந்து
வீழ்ந்ததுளியென் ஞெருபாடல் விண்டோய் முத்தந்தருகவே
மேலோர்பரவு மரிகைநகர் விமலாமுத்தந்தருகவே (6)

மூன்றுங்குண மோடறிகுறிகண் மூலவிவிச்சை நிலைகடந்த
மோனத்தலத்து ஞானமய முகிழ்த்துச்செழித்து வளர்கரும்பே
வான்றாழ் குழலிக்குஞ் சரிப்பெண் மாறுநசையாந் தூரியத்தான்
மனமாமடலின் வரைந்தழகின் மயங்கிமுயங்கு மோவியமே
தோன்றாத்துணையாவகிலமெலாஞ் சொல்லும் பொருளுமெனக்கலந்து
சுடருஞ்சுடர்க்கு மொருசிறிது தோற்ற மளித்தசுடர்க் கொழுந்தே
தேன்றாழ்குதலை மொழிசிதறு சிறுவா முத்தந்தருகவே
திருவாரிகைப் புராதிபநின்றிருவாய் முத்தந்தருகவே (7)

தெற்குக்கருமான் பொதியமெனச் செப்புந்துருத்திசிறிதலைப்பச்
சீறுஞ்சிறுகாலனல் கொளுந்தச் சிவந்ததேமாந்தழை நாப்பண்
நிற்குங்குறுங் கட்குயிலிணங்கள் நீடுமெரியாற் கரிந்ததென
நினைந்தங்கிரங்கு மந்திகந்தி நெறிவானகத் தினிலைமேவிச்
செற்கட்டுதிர்ப் பக்கார்ப்பருவம் சிறந்ததெனக் கேதாரமவண்
சென்றேகளி யிணுடல்செயல் தெரிந்து மயங்குமாராமம்
இற்கம்ணருங்கு மரிகைநகர்க் கிறைவா முத்தந்தருகவே
இருடைபங் கொடிக்கோர் கொழுகொம்பா மிறைவாமுத்தந்தருகவே (8)

பங்கேருகத்தின் அலர்பரமன் பாலவிழியே பாங்கர்துறை
படியுங்கரண்டந் தருக்கமொழிபகர்ந்த கீரனெனுங்கவியே
அங்கோருறுமீன் வரநிலையின் அசையாதிருக்கும் வலாகமெலாம்
அரணர்செயல் கண்டுளம் விறைத்த அவைசூர்பொரு விற்புல வர்களே
சங்கேதத்திற் கத்துகின்ற தவளைக்குலங்கண் மறைபுகன்று
சாந்தமருவப் புகழ்நின்ற தாசர்குல மேயெனுந்தடஞ்சூழ்
செங்கேழ்மணி மாளிகையரிகைச் செல்வா முத்தந்தருகவே
தேவாதேவர் சிறைமீட்ட திறலோய் முத்தந்தருகவே (9)

வேறு

தனைநிகர்க்குஞ் சுவைபெருக்குந் தமிழமுத்தந் தருகவே
சடைமுடிக்கும் பரமர்மெச்சுந் தனயமுத்தந் தருகவே
தினைபுரக்கும் கனிமயக்குந் திறலமுத்தந் தருகவே
செவியினிக்குங் குதலைகொட்டுஞ் சிறுவமுத்தந் தருகவே

கனைகடற்கங் குறைவிடுக்குங் கடவுண்முத்தந் தருகவே
கரிவளர்த்தங் குதவுபொற்குங் கணவமுத்தந் தருகவே
குனிவளைக்குஞ் சமர்தொலைக்குங் குமரமுத்தந் தருகவே
கொளுமிசைக்கங் கரிகைநிற்குங் குமரமுத்தந் தருகவே (10)

முத்தப்பருவம்—முத்தங்கொள்ளும் பருவம். இதுபதினோரா மாதத்தில் நிகழ்வது.

முத்தப் பருவம்
முற்றிற்று.



ஆறுவது
வருகைப் பருவம்.

பண்ணேர்மறைமாமலைமுகட்டிற்பகலுமிரவுமில்லாமற்
பரவுமடியரகத்திமிரம் பருகிப்படரும் பரஞ்சுடரே
கண்ணேகண்ணிற் கதித்துலவுங் கரியமணியே மணியொளிருங்
காட்சிப்பிழம்பேகாண்பொருளே காணுவிழியிற்காண்பவர்தம்
உண்ணேர்விமலகமலநிலை யூறுதூறிப்பெருக்கெடுத்தங்
குலவுமமுதேயுயிர்க்குயிரா முற்றதுணையேயிணையற்ற
மண்ணீர்வளிகால்வான்முதலாமலிந்தாய் வருகவருகவே
வளனுரரிகைமடாலயத்தின் வாழ்வே வருக வருகவே (1)

மடியிலணைத்துவாய் நெறித்து வள்வாய்ச்சங்கின்முனைசெருகி
மடக்குமடக்கென் றுயரமுதால் வயிறுநிரப்பவாய்மலர்ந்து
நெடியகுரலிற் கரைதருமந்நினைவங்ககலநுசுப்பேற்றி
நீடார்மறுகினூடுபுக்கு நிலவும் பொருள்கள்பலகாட்டி
விடியவிடியச் சீராட்டி வேண்டல்புரியுமடியேங்கள்
விரும்பியழைத்தால் வாராது வெறுத்தலழகோவேதாவில்
வடிவாவவுணர் குலந்தொலைத்த வடிவேன்முருகவருகவே
வளனுரரிகைமடாலயத்து வாழ்வே வருகவருகவே (2)

எல்லாந்துறந்த நல்லார்தம் இதயமெனும்பேராலயத்துக்
கேற்றும் விளக்கேயிருவினையால் இறந்து பிறந்து சுழல்தருமோர்
பொல்லாங்கிகலும் பெருநோய்க்குப்பொதுவினடிக்கும் புராதனர்தம்
பொடியார்குளக்கண்முளைத்தருள்செம் பொலனேர்பலவப்புதுமருந்தே

சொல்லாங்கரணவளவையிற்சீர் தூக்கிநோக்கற்கரிதாகி
துவாதசாந்தப்பெருவெளியிற் றுளும்பானந்தசாகரமே
வல்லார்பரவும் ஞானமயவைப்பே வருகவருகவே
வளனூரரிகைமடாலயத்து வாழ்வே வருகவருகவே (3)

மாயாமயத்தின் மயங்காது வணங்குந்தொழும்பர்வருகவென
வாராதிருக்குக் கடவுளர்தாமற்றெங்குளரோவதுவன்றித்
தாயாரழைப்பவாராத தனயருளரோவணிசிலம்பின்
சதங்கையணிகள்கலகலப்பத் தளர்வுநடைகொண்டணிமார்பிற்
சேயார்மணிகள் பளபளப்பத்திருக்கையாழி மினுமினுப்பச்
சிறியவயிறுநனிகுழையச் சென்னியசையச்சிறுநகைசேர்
வாயாரூறன்மடிநனைப்ப வடிவேன்முருகவருகவே
வளனூரரிகைமடாலயத்து வாழ்வே வருகவருகவே (4)

மடிமேலிருக்கும் பொருளுதவேன் மலர்க்கைபொதிந்த திரவியமும்
வழங்கேனூர்வமிதூரவாரியணையேன் முத்தாடேன்
கடியபசிக்குக்கலசமுலைக்காம்புங் காட்டேன் கனகமணி
கவினுந்தொட்டில் தனிலேற்றிக் கானவினியதாலாட்டோர்
அடியுமிசையேன் துடியிடையில் அமரவணைத்து வீதிமணல்
ஆடவிடுக்கேனணிகலனு மணியேன் மறைகள்வகுப்பரிய
வடிவிற்சிறந்து சிவந்தொளிரும் மதலாய் வருகவருகவே
வளனூரரிகைமடாலயத்து வாழ்வே வருகவருகவே (5)

நன்றேர்கருணைக்கனிகனிந்து நாலுந்தருவே வருகவரை
நாடிநடித்தங் கருண்மாரி நயக்கும்புயலேவருககுணக்
குன்றேவருககுணங்கடந்த கோவேவருக சிவனார்க்குங்
குருவேவருக சிவந்தழைத்த குருந்தேவருகசவிதிளைத்த
கன்றேவருக வரநதிக்கோர் காதல்வருக மறைநான்கின்
கரையேவருக கரையிறந்த காணக்காட்சிகாண்பவருள்
மன்றேவருக வறுமுகத்தெம் வள்ளால் வருகவருகவே
வளனூரரிகைமடாலயத்து வாழ்வே வருகவருகவே (6)

ஊட்டவருக முலையமுதம் உலைந்து சரிந்தகுஞ்சிமுடி
உளுற்றவருக நீராட ஓடிவருகவொருதிலதந்
தீட்டவருக செவிக்குழைகள் செறிப்பவருகவேற்பவணி
சேர்ப்பவருக மையனந்திளைப்பவருகவரைச்சதங்கை

பூட்டவருகவொருகுதலை புகலவருகவுடற்படிதூள்
போக்கவருக பூதியணி பூக்கவருக பூங்கடம்பு
சூட்டவருக சூரனெனுந் தோகைமயிலோய்வருகவே
தூயோயரிகைமடாலயத்துத் தோன்றல் வருகவருகவே (7)

பண்பார்பசனைமகாசபையிற் பாரவிளங்கு பாண்புலவர்
பாடுமிசையின் மனங்கலந்த பரிசோவரிசைப் புலவர்சொலும்
வண்பாசுரத்தின் பொருணயத்தின் மயங்குமயக்கோவாங்கவர்கள்
மனம்போல்வேண்டும் வரங்களெலாம் வழங்கவுளமாங்கெய்திற்றோ
கண்பார்த்திலையென்பராமுகமென் கந்தாசுகந்த மலர்க்கடம்பா
கார்த்திகேயா காங்கேயா கதிர்வேன்முருக கடவுளரை
விண்பாற்குடிபுக்கிருக்கவைத்த வீராவருக வருகவே
வேதமுழங்கு மரிகைநகர் விமலாவருக வருகவே. (8)

சோதிசுயமாந்திருமேனி தூசிபடர்ந்த தெனமயங்கித்
துடைத்தபிழையோ வழகனைத்துந் தொடர்ந்து குழுமிவடிவெடுத்த
கோதிலியற்கை யழகையணிக் குலத்தான்மறைத்த தவறேயோ
குறுகாநினக்கும் பசிநோவு கொளுத்திற்றென வூட்டியகுறையோ
யாதின்றறியேன் வருகவென வென்னேவாராதிருக்கும் விதம்
இயம்பாயியம்பா யெனதாவற் கிருப்பாவிருப்பா மிளமதலாய்
ஆதிபகவனுதற்கணநுள் அருமைக்குழந்தாய் வருகவே
அணிசூரரிகை மடாலயத்தின் அழகாவருக வருகவே. (9)

வேறு

சலச மலரி னணிகொளடிகள் தளரவொளிர வருகவே
தமிழினினிய குதலைமொழிகள் தழையவிழைய வருகவே
விலகலரிய கருணைமழையை விழிகள்பொழிய வருகவே
வெயிலி னொளிசெய் குழைகள்செவியில் விலகவிலக வருகவே
அலகில் வலிமைதழுவுபுயம தசையநசைய வருகவே
அகில வுலகுநின துதகவி னளவவிளவல் வருகவே
வலவைகொழுநனனுசமுருக வருகவருக வருகவே
மருவுமிசையினுயருமரிகை வரதவருக வருகவே. (10)

வருகைப்பருவம்—வருதலைவிரும்பி அழைக்கும் பருவம்.
இது பன்னிரண்டாமாதத்தில் நிகழ்வது.

வருகைப் பருவம்
முற்றிற்று.



## ஏழாவது

### அம்புலிப் பருவம்.

மணிகொண்ட பொதுமேவி நடமாடுதன்றாதை வளர்சடை முடிக்கண்
முடியா
வைத்திட்டதுய்த்திட்டறிந்து கொன்மலர்மேவு மாமியொடுநேமியாங்கு
கணிகொண் டெழுந்திட்ட காரணங்கருதிகொல் கழறுமத்தானெனச்
சொல்
கருவேள் தனக்குரிய வெளியவொருகவிகையாக்கதித்திடுதலோர்ந்து
கொல்லிப்
பணிகொண்ட பாரிடத்துனை நன்றுவம்மெனப்பம்மெனப்பரவுமமுதம்
பாலிக்குமதலையம் மொழியினலின்றிவன் பரிவுடனழைத்திட்டதால்
அணிகொண்ட மாடவரிகேச புரவாசனேடம்புலீயாடவாவே
அஞ்சுமுக நாதரருளாறுமுக வேலனேடம்புலீயாடவாவே (1)

தாங்கப்பெருங்கடல் கடந்துபதினறு கலைதகைவுபெற மிகைவினேங்கித்
தழைகின்றநினதமுத வட்டமதுகண்டிவன் தாயுமையின் வதன
மெனவும்
இரங்கப்பயக்கடலுறங்கு மாதுலரங்கையேற்றவொரு பணிலமெனவும்
இப்புவியடங்கலினு மொப்புரவினிரு ணீக்கியிலங்கு நின்னிலவை
வேதத்
துரங்கப் பெருஞ்சோதி நீறுன்முழுக் கிட்டதுய்ய திருமேனியெனவும்
தூயதிருமாமிதாய்வீடெனவு மெண்ணியத் தொடர்வு கொடழைத்த
னனிசை
அரங்கப்பெருங் கோயிலரிகைநகர் வாசனேடம்புலீயாடவாவே
அலர்கொடி யிரண்டுபடர் ஒரு கொழுங்கொம்பினுடனம் புலீயாட
வாவே.
(2)

சங்கக்குழைக் காதர்சடையுளாய் நீயிவன் சார்ந்தவணுமேவி மகிழ்வான்
சடைச்சானவிக்கு முறவாவை நீயிவனு மச்சரவணக் கங்கையுறவே
மங்குற்கரும்பெற்ற மூர்திவாமத்துவிழிமணியாவை நீயுமிவனும்
வழியழன் முழங்குவிரிநுதலினயனத்தினெளி மணியாவனணி கொள்
தேவர்
பொங்கிச்சுடும்பசிக்குணவாவை மற்றவர்ப்போற்றுமுயிராவனிவனும்
புகல்போழ்தி வினையற்ற இவனையொருவாறுநீபொருவுதரு கிற்பை
யதனல்
அங்கப் பெருஞ்சுருதி அரிகை முருகேசனுடனம்புலீயாடவாவே
அலர்கொடி யிரண்டுபடர் ஒருகொழுங் கொம்பினுடனம்புலீயாட
வாவே.
(3)

வானகத்தடனோடி மேன்மையுடனுடலால் மாமலரை வாட்டிவிடலால்
வானவரை நாட்டிடப் பொருகையால் அணியான வரைபட்ட கண
முடைமையால்
தானவரை நளியாதரித்தலால் ஆற்றலால் தாவுசிகிவாய்ப் பெய்தலால்
தனமருவவளிவலத்தாற்றி நிலவுறுதலால் தலைவிசாலம்பணிதலால்
கானமிசையாம் பலைமணப்பமுனமேவலாற் கலாநிதி யெனப்படுதலால்
கழறுமகமேடத்து முந்தலாவிவனை நீகதுவுறுவை போலுமதனல்
ஆனகமுழங்கு மரிகேசபுரவாசனேடம்புலீயாடவாவே
அலர்கொடி யிரண்டுபடர் ஒருகொழுங் கொம்பினுடனம் புலீயாட
வாவே (4)

உண்மாசு கழுவுவதுநீறென்பநின்னுடற் குட்பட்ட வாசுநீத்தற்
கொள்ளிலை விபூதியிவனுழையுளதுமற்று நின்னெளி கெடத்தேய்ந்து
மாயும்
திண்மாயநோய்நீக்கஞானபண்டிதனை சீர்மையால் மணிமந்திர
சித்தனிவனேயாவனீபெற்றசாபமிவனேர் பட்டிடப் பறக்கும்
விண்மாசுணப் பகைமையினியில்லை யிவனேறுவீரமயில் கூறுகாணும்
வேறுமொரு கொடிதானவிரு வினையுமினியுன்னை மேவாதுபோதல்
திண்ணம்
அண்மாடமலியுமரிகேசபுரவாசனேடம்புலீயாடவாவே
அலர்கொடியிரண்டுபடர் ஒருகொழுங்கொம்பினுடனம் புலீயாட
வாவே (5)

இருக்குமுறை யொருமக மியற்றுசிறு விதிசாலை யெய்திட்ட விமை
யினோட்டத்
தெவரெவருமங்கமொன்றங் கிழந்தனராகி யீடழிந்துய்ந்துபோக
உருக்கிட்டவெள்ளித் தகட்டினிக ருன்மேனியுருவழிய விவனின்முன்

உலகம்மியிற்பதக் குழவியினரைத்தனன் ஒருமுறைவராதுபோகின்
எருக்கிதழிநதி பூத்தவிறைவர்செஞ்சடில மேலிருநான்கு புய
நெறியதாய்
இளையனிவனும் மேறியெட்டியுதை யாதிரானிருதயத் திதனையுன்னி
அருக்கனெளிர் முடிமாடவரிகை முருகேசனேடம் புலீயாடவாவே
அலர்கொடி யிரண்டுபடர் ஒருகொழுங்கொம்பினுடன் அம்புலீயாட
வாவே (6)

மதுமலர்வாழ்க்கை மதுகாமினிதுபாண்முரல்மரையினம் மறை.
களோத
மலர்ந்துமலராது நிமிர்செவ்வாம்பல் நெய்வார்ந்த வலந்தழு உ மனவி
யாகக்
கதுவற்றுளிப் பன்னமாலத் தியேந்திநெற் கதிர்க்குலங்கவரிவீசக்
கமழ்கின்ற சோலையம்பொதியாசலத்துநிலைகால்கொள் சிறுகாலலைப்பத்
தகையிதழொராயிரத் தளிமளினத்து நடுதமனியப் பொகுட்டிடத்து
தவளந்தழைத்த சிறையாசனஞ் சேவல்பெடைதனைமணந்தினி
திருக்கும்
அதுலியமதான அரிகேசமுருகேசனேடம்புலீயாடவாவே
அலர்கொடி யிரண்டுபடர் ஒருகொழுங்கொம் பினுடனம் புலீயாட
வாவே. (7)

வடிவருந்திழிமள்ளருந்தல்புரியேறெலாமங் குலவைகளை குரலெலாம்
வானேறு மற்றவர்கை யோச்சுமுட்கோலெலாம் வரிபடவிளங்குசபலை
படியகழ்ந்தரிதூரு கொழுமழுவு நாஞ்சில்கற் பகத்தலைவர் சிந்துவாரம்
பானிறப்பணிலங்கள் வயிறுளைந்தீன் றிட்டபருமணிக் குலங்கள்
விண்மீன்
நெடிகெழுமுமள்ளற் கருஞ்சேற்று நிலனெலாநீனிற னிலங்குவானம்
நேர்பொருவதாமெனப்புலவர் புகல்கின்றநன்நீர்மையுடன் முருக
னெங்கோன்
அடியருநிறைந்த வரிகேசபுரவாசனேடம் புலீயாடவாவே
அலர்கொடி யிரண்டுபடர் ஒருகொழுங்கொம்பினுடனம் புலீயாட
வாவே. (8)

கலக்கும்பழங்கூழருந்திநிறை பெய்தகூழ்க் கலந்தலையிலேற்றின்
னடை
காயலகொதுக்கி யிளமதலையை நசுப்பிடங்கதுவ வணைதந்துசேரிக்
குலக்குடிகடந்து பழனச் சிறுவரப்பிடைக் குறுகவட்டூ சனூற்றிக்
குதலைக்குழந்தையழல் தவிழ்தரவுழத்தியர் குரலெடுத்தினிதுபாடித்
தலக்குரிய பசிபறித்தெறிவர் போற்களை யெலாந்தடிதரச் சூன்
முற்றியே
சாலிப்பரப்பினிமிர் தமனியச்சிறு மணிச்சரனெலாந் தென்றிசாய
அலக்கும் வளத்தினரிகேசபுரவாசனேடம்புலீ யாடவாவே
அலர்கொடி யிரண்டுபடர் ஒரு கொழுங்கொம்பினுடனம்புலீயாட
வாவே. (9)

சரிமுதலெழுப்பு மிசைநிபுணர்பலர் பயில்கின்ற சங்கீதசாகித்தியந்
தண்ணுமைமகரப்பு நிரையாழ் குழலினேசை செவிததும்பநய மார்தல்
பெறலாம்
விரிமறைகலைப் பகுதிநிரைதெரிவரற்பினிறை வித்தகப் பஜனைசபையில்
மேவியளவளவலா. மாடலாம் பாடலாம் வெற்றிவேற்குமரனெங்கள்
கரிமுகர்க்கிளைய கோகொலுவினை யடுத்தினிது கண்கொளாக்காட்
சிபெறலாம்
கருணைபுரியிவனுடன் மருவிவிளையாடலாங் கலியெலாநீத்தல்செயலாம்
அரிகைநகர் தழையவந்தருளு முருகேசனேடம் புலீயாடவாவே
அலர்கொடி யிரண்டுபடர் ஒரு கொழுங்கொம் பினுடனம் புலீயாட
வாவே. (10)

அம்புலிப்பருவம்—சந்திரனை விளையாட அழைக்கும் பருவம். இது பதினெட்டாமாத நிகழ்ச்சி.

அம்புலிப் பருவம்

முற்றிற்று.

## எட்டாவது

## சிறுபறைப் பருவம்.

ஒவ்வாதவெதவ்வவுணருறை நகரமெங்கெங்கு மோய்பிணப் பறை
முழங்க
ஒழியாதவலமேவு மொருசூர்க்கு மச்சத்தினுள்ளிடப் பறைமுழங்கத்
தவ்வாதவாழ்க்கை யினியுற்றேமெனத் தேவர்தாஞ்செயப் பறை
முழங்கச்
சாற்றரியபாரிடத் தலைவர்புரிகர்ச்சனைகடத்துவாய்ப் பறைமுழங்கத்
துவ்வாமையற்ற வதிமோகவிந்திரகு மரிதொடர்மணப் பறைமுழங்கச்
சோரிநிணவாரிநடு வோரிரத மேலினிது தோன்றியொளிர் சங்கமேந்திச்
செவ்வாய்முழக்கு மரிகேசபுரவாசனே சிறுபறை முழக்கியருளே
தேவாதிதேவரருள் பாலமுருகேசனே சிறுபறை முழக்கியருளே. (1)

ஆர்ந்தகிளைகூர்மறைமுழங்க நாலேழான ஆகமபுராணமாதி
அனுதினமுழங்க முத்தமிழிசை முழங்கல்பெற அகிலாண்டகோடி
யின்பங்
கூர்ந்திடமுழங்க வுயர்சைவமுதலாஞ் சமயகோடிகண்முழங்கஅடியர்
குழுவழிவிளங்கவவர் துதிமொழிமுழங்க விரி குரான்முதலெழுப்பு
மிசையிற்

றேர்ந்தவர்கள் சூழ்ந்திட்ட பசனசபைநீடூழி சீர்மைபெறவே முழங்கச்
செல்லினின மழைதரமுழங்க மனுவேந்தர்தஞ் செங்கோலின் முறை
முழங்க
சேர்ந்தமணிமாட நிறையரிகை நகர்வாசனே சிறுபறை முழக்கியருளே
தேவாதிதேவரருள் பாலமுருகேசனே சிறுபறை முழக்கியருளே. (2)

தாண்டாதநீண்டு நிறைபேரின்ப வெள்ளமே தாழாது வீழாதுமேற்
றழையாதுதழைகின்ற தைவதத்தாருவே தனுகரண புவனபோகம்
ஆண்டாண்டுயிர்த்தொகைகள் துய்ப்பவருமுண்மையே அல்லதுவு மில்
லதுவுமாய்
அண்டப்பரப்பெலா மண்டிநிறை பெறுகின்ற அற்புதப் பொற்பின்
வாழ்வே
தூண்டாவிளக்கமே தோன்றுததோற்றமே சோதியே சுகபோதமே
தோளாதமுத்தமே தோயாதநீத்தமே துணையான துணையில்பொருளே
சேண்டாது தூவுபொழிலரிகை நகர்வாசனே சிறுபறைமுழக்கி
யருளே
தேவாதிதேவரருள் பாலமுருகேசனே சிறுபறை முழக்கியருளே. (3)

இன்னமுதுவயிறூர வூட்டியணைசெய்கின்ற வெம்பொருட் டொருதர
முனே
யீன்றிட்டவிமயா சலத்தவட்கோர் முறைஇருவ ரொடெவர்க்கு
மிறைமை
மன்னியருள் தன்னிரு முதல்வருக்கோர்முறை வழிவழித் தொழும்பி
னிற்கும்
மாதவர்க்கோர்முறை மலர்பறித்தர்ச்சனை வழங்குமடியார் தமக்கு
நன்னயமதோர்முறை ஞானியர்க்கோர்முறை நானிலநயந்து போற்று
நல்லிசைப்பசன மாசபையினுக்கோர்முறை நட்டவர்க்கோர் முறை
யதாய்
சின்னநினவங்கை கொண்டரிகை நகர்வாசனே சிறுபறைமுழக்கி
யருளே
தேவாதிதேவரருள் பாலமுருகேசனே சிறுபறை முழக்கியருளே. (4)

மங்கலமணத்தினெழு மண்கணை முழக்கு முழர்மரக்கப் பிறையினிர்ப்பு
மாணவர்கல்லூரிதருகம்பலைகள்வேதியர் வழங்குமறை யாரவாரம்
கங்கையணி செஞ்சடைக் கடவுள் தளிதோறுமுறு காஸினிமிர்கம்பி
நாதம்
கந்துகநிகர்த்த முலைமானினியர் அணியுராய்க்கல் லெனுஞ்சும்மை
யின்பம்
பொங்களவில் கீதமுறைகை போயகாயகர்கள் புகல்கின்றகானநிதனம்
பொருவில்தமிழ் வாணர்புகல் பாசுரத்தின்னோசை பொம்மல்பெறு
கின்ற புகழ்சேர்
திங்களணிமுடிமாடவரிகை நகரதிபனே சிறுபறை முழக்கியருளே
தேவாதிதேவரருள் பாலமுருகேசனே சிறுபறை முழக்கியருளே. (5)

நகைமகிழ்சிறந்தமுகமினிதுவியர் வாடிவலனுட வருணயனங்களும்
நன்னுதலினெறிகாண வள்ளணிகள் தள்ளாடநறிய ராசீவகத்தின்
தகைமருவியம் பொலங்காப்பிடங் கணியாழிதழுவு தருபாணிசேப்ப
தடந்தோளிடங் கொண்டபணியிடம் பெயர்தந்து தாழ்ந்தசைந்
தூசலாட
தொகைமலரிதழ்க்கமலமலரிணையெனப் புகல்செய்துணையடிச் சதங்
கையார்ப்பச்
சூழல்பெறு மெம்மனோரழியாத வின்பநீர்த்துறைக்கடலினினிது
மேவச்
சிகைமயிரவரிகேச நகரமுருகேசனே சிறுபறை முழக்கியருளே
தேவாதிதேவரருள் பாலகுமரேசனே சிறுபறை முழக்கியருளே. (6)

கோப்புடனெடுத்தன் முதலாயமுறை பயில்கின்ற கோசிகப் பனுவ
லேய்ப்பக்
கொம்பொடுநெருங்குதலை மாலையலரொன்புடன் குங்குமச்சேறு தூர்ந்த
பாப்பலங்காரப் புயாசலத்தபிகயப்பான்மையின் நேர்மையொப்பப்
பணிபலதிருந்து மறைநிரைபெற முழங்குமிருபதநிறுவுசதிகளார
மாப்பெருஞ்சவைநடுவில்நடனமிடு மொருவர்க்குமகிழ்நந்திதேவர்
மேனாள்
மண்ணமர் குறுங்கணெடுதண்ணுமை முழக்கிட்டவகைதகையின்மல
ரினங்கை
சேப்புறத்திருவரிகைநகரமுருகேசனே சிறுபறை முழக்கியருளே
தேவாதிதேவரருள் பாலகுமரேசனே சிறுபறை முழக்கியருளே (7)

முத்தத்திருக்கோவை நிரையொன்று மணிமாட மோட்டுத்துகிற்ப
தாகை
முகிற்குலமெனச்செங் கதிர்க்களை மறைத்திடலு மொய்க்குமிருளுட்
கியோடக்
கத்தித்திருக்கணங்கணையரணிமணிகான்ற கற்றையங்கதிர்புரிதலால்
காண்டாவனக்குரிசில் ஆண்டவமராபதிக்கடிநகரையேய்ப்பதாயும்
சுத்தத்துயர்ந்தரிய பொதியாசலத்தினிய சுதையாகியினியவமுதச்
சுவையாநிறைந்தொழுகு பொருநாநதிப்பெருமை சூழ்ந்திட்டதாகி
யுறுவார்
சித்தத்தினிப்பருளு மரிகைநகர்வாசனே சிறுபறை முழக்கியருளே
தேவாதிதேவரருள் பாலகுமரேசனே சிறுபறை முழக்கியருளே (8)

எய்யருங்கோற் சிலைக் கிராதரிறை மகளிர்தம் மிருவிழிக்கிணை
பொருவதாய்
இரவுக்குறிச்செலற்கூன்றுமொருகோலதாய்எரிகின்றவர்த்தியதுவாய்
வெய்யவெஞ்சூர் கிளைக்காலமாய் வேண்டல்புரி விண்ணாட்டவர்க்க
முதமாய்
வீசலைசுருட்டுததி நீறுபடவீற்றினெழு வீங்கனல் வடவையதுவாய்
மைதவழ்நெடுஞ்சிகைக் கைதவமலைக்குறுமுவானேறதாய் வணங்கு
வழியடியர்பற்றுபவ பந்தணையறுக்கு மொளிர்வானதாய் வழங்கல்
பெறுமோர்
செய்யவயிலேந்து மரிகேசமுருகேசனே சிறுபறை முழக்கியருளே
தேவாதிதேவரருள் பாலகுமரேசனே சிறுபறை முழக்கியருளே (9)

தத்தித்தவழ்ந்துதிரை நத்தமொடுமுத்தமெறிதருதிருச் செந்தூரினில்
தண்ணெனக் கல்லென்ன வொள்ளொளி பரப்பருவிதாழ்பரங்
குன்றிடத்தில்
தித்தித்தசெந்தமிழ்ச்செல்வந்திகழ்ந்திட்ட திருவேரகத்தினுளும்
சிவநெறி தழைத்திட்ட வடியருறை விடமெனுந்திருவாவினன்குடி
தனில்
பத்தித்தடங்கடற் படிபவர்க்கிடமான பழமுதிர் சோலைதன்னில்
பரவல்பெறுகுன்றுதோறுடிடப்பாங்கரில் பசனசபைமேவுமடியர்
சித்தத்திலுறைகின்ற அரிகைமுருகேசனே சிறுபறை முழக்கியருளே
தேவாதிதேவரருள் பாலகுமரேசனே சிறுபறை முழக்கியருளே (10)

* சிறுபறைப்பருவம்—சிறிய தோற்கருவி தட்டிவிளையாடும்பருவம். இது இரண்டாவது வயதில் நிகழ்வது.

சிறுபறைப் பருவம்
முற்றிற்று.



## ஒன்பதாவது

### சிற்றிற் பருவம்.

ங்கையால்வருந்தியாங்குயின்ற கவிஞர்மனையை நினதுமலர்க்
காலாலழித்தாலக்கழலிற் கடிதுபடியும் பொடிப்படலம்
பையாலுறங்கு நெடுமாயன் பதுமத்தலைவன் பண்ணவர்கோன்
பணிசேர் மகுடகோடிதனிற் படிவருளத்தாமரைப்போதில்
மையாலுயர்கந்தரக் கடவுள் வளர்செஞ்சடையில் மதிப்பிறையில்
வரமாநதியிலுமையாடன் மடியில் மறைமாமுகட்டிடத்தில்
செய்யார்புழுதி செறியாதோ சிறியேஞ்சிற்றில் சிதையேலே
தேவேயரிகை மடாலயத்துச் செவ்வேள் சிற்றில்சிதையேலே (1)
தாயேதகவிலாது விடந்தனயர்க் களித்தால் ஒளித்திவலைத்
தரங்கக்கடலே குமிழெழும்பத்ததும்பிக்கொதித்தால் விதிப்புறம்பிற்
போயேயுலகம் பரிதவிப்பப் புரப்போன்விடுத்தால் விலங்காதி
போற்றுஞ்சிறையேபூஞ்சாலி பொலிபூம்பயிரை மேய்ந்திட்டால்
வாயேதுரைப்பவுய்தாவோர்வழியேததுபோனிறைகருணை
வள்ளால் நீயே யழித்துவிடின் மற்றிங்கெவரே யாசரிப்பார்
சேயேதேவர் சிறைமீட்டோய் சிறியேஞ்சிற்றில் சிதையேலே
திருவாரரிகை மடாலயத்துச் செவ்வேள் சிற்றில் சிதையேலே (2)
மயலானிறுவுச் சிறுவீடென் மறியுந்தரங்கப் பேரகழி
மாயாபுரியோவப்புரியின் வதியும்விதிர்வாட் கரத்தவுணர்
வியனுந்தலைமைப்பொருசூர வீரனுடலோவிரிகடலோ
விண்ணோர்கதிரின் கதிமறைப்ப வீங்குகபடத்தடங்கிரியோ
உய்யலாநெறியென்றுறெழுத்தை யுணர்வார்க்குரியபவவினையோ
ஓடியடுத்திங்கொளிர்சதங்கை ஒலிப்பத்திருத்தாளோங்குமொரு
செயலேதறியேனருள்புரிக சிறியேஞ்சிற்றில் சிதையேலே
தேவேயரிகைமடாலயத்துச் செவ்வேள்சிற்றில் சிதையேலே (3)
விரிநீராற்றினணைகோலி மேவலரிதோவிடலரிதோ
மேலொன்றேற்றிவிடலரிதோ வீழவிடுத்தலரிதேயோ
எரிநேர்சினத்தையடக்கிவிடல் எளிதோகாட்டலெளிதேயோ
எளியார்களிப்பச் செயலெளிதோ இரங்கவிடுத்தலெளிதேயோ
பிரியாநசையிற்பால் கொழித்துப்பெரிதுகுயின்றசிறுமனையைப்
பேர்த்தலெளிதோ கண்டுகளிபெருக்க லெளிதோதிருக்கருத்தில்
தெரியாதனவுமுளதேயோ சிறியேஞ்சிற்றில் சிதையேலே
தேவேயரிகைமடாலயத்துச் செவ்வேள் சிற்றில்சிதையேலே (4)

கூர்த்திட்டுடற்று மவுணரொடு குலவும்புரங் களொருமூன் றுங்
குறியநகையானீறுக்குங் கொற்றப்பெருமான் குமரனென
ஆர்த்திட்டெதிரு மரக்கர்பயில் அணிகூரிலங்கை விலங்கலெலாம்
அனலிற்கரிய வொருகுரங்கால் அழித்ததிருமான்மருகனெனப்
போர்த்திட்டிகலுந்தளத்தோடு புழைக்கையவுணனுரங்கீண்டு
புக்கிலழித்துமலர்வாகை புனைந்தோனனுஜனெனப்புகலுஞ்
சீர்த்தியிதனல் விளங்குவதோ சிறியேஞ்சிற்றில் சிதையேலே
தேவேயரிகைமடாலயத்துச் செவ்வேள்சிற்றில் சிதையேலே (5)

பாரப்பரியகுலகிரிகள் படர்சூழ்சுவரா மேருநடுப்
பரிக்குமெழுவா வானிறையாப் பானுமதியேற்றிடுவிளக்காச்
சேரப்பணித்தங் குயிரனைத்துஞ் சிருட்டித்தளித்துத் துடைக்குமிவை
சிறியவிளையாட்டுனுக்கு நெடுந்தெருவிற் புழுதிதனைக்கொழித்துக்
கூரப்பலவாமறைநிறுவிக்குருமாமணிச் சோறிட்டியட்டுக்
கொள்ளுங்கறிகள் பலகுறித்துக் கூடிக்களித்துவிளையாடல்
தீரப்பரியதெமக்குங்காண் சிறியேஞ்சிற்றில் சிதையேலே
தேவேயரிகை மடாலயத்துச் செவ்வேள்சிற்றில் சிதையேலே (6)

பன்னாள்வேலைகுயவனுக்குப் பாரத்தடியர்க் கொருகணத்திற்
பாதிப்பொழுதினொருவேலை பகருமிதுபோற்பரல்கொழித்து
மன்னுதரத்தினெடுநேரம் வடிவிற்குயின்றசிறுவீட்டில்
வாழப்புகுதுமெமதாவல் வரம்பையழித்தலழகேயோ
பின்னரணிந்தார்கருணையெனப் பேராதரிக்குமணிகலத்தைப்
பித்தப்பெருமான்மதலையெனப் பெரிதும்புகல்வேமகவிதழ்கூர்
தென்னுதரித்தபூங்கடம்பா சிறியேஞ்சிற்றில்சிதையேலே
தேவேயரிகைமடாலயத்துச் செவ்வேள்சிற்றில்சிதையேலே (7)

பவளச்செழுந்தீ படரடுப்பில் பணிலக்கலத்திற்றாளமெனும்
பானீர்வல்சியரித்திட்டுப் பதத்தின்வடித்தநறுஞ்சோற்றுக்
கவளத்துடனேநவமணிகள் கலந்தவருக்கவகையதனல்
கவினவிருந்தும் புறந்தருவேங்கனிவிற்பதிநீமனைவியெனும்
குவளைவிழியாமெனக்குறித்துக் குலவிக்களிப்பேமித்தகைய
குடியைக்கெடுத்தலுன்போன்றகுழகர்க்கழகோவணிகலங்கள்
திவளுஞ்சிறியபதமலராற் சிறியேன்சிற்றில்சிதையேலே
தேவேயரிகைமடாலயத்துச் செவ்வேள்சிற்றில்சிதையேலே (8)

பேணிப்பலநாள்வேண்டுவன பெரிதுமுதவிப்போற்றினரைப்
பின்னுண்மறந்துபிறர்க்குதவு பேயர்க்கதழ்வக்கதலியெலாம்
கோணிக்கொடுக்குங்கனித்தாற்றுக் கொழுந்தேன்றெவிட்டவாய்
குழைசேறழுகுபழனமெலாங் குலவிப்புரளுஞ்சேலினங்கள் [மடுத்துக்
நாணிக்கவிழ்ந்துநடைபயிலும் நன்னரியர்தம்நயனத்தை
நாணுநடையின்மடவார்தம் நடலையுளத்தைநனிதெரிக்கும்
சேணித்தியமாவளத்தரிகைச் செவ்வேள்சிற்றில்சிதையேலே
தேவேயரிகைமடாலயத்துச் செல்வாசிற்றில்சிதையேலே (9)

தங்கமணிகள்பலகோத்த சரங்கள்நான்றகாவணத்திற்
ரூற்றுக்கதிர்கள்நனிபழுத்துத் தலைகீழ்கவிழும்பழனநடு
சங்கமொலிப்பச்செங்குவளைத் தண்டேனுகர்ந்தகெண்டையெலாம்
தாவிக்குதித்துநடமாடத் தாதுபுதைந்ததளவரிசை
பங்கப்புழைமாமனைமுன்றிற் பங்கேருகமாமனைமேவிப்
பகுக்குங்கவைத்தாள்நள்ளிமணம் பாங்கிற்புரியும்பூங்கழனி
எங்குநெருங்குமரிகையுளாய் எளியேஞ்சிற்றில்சிதையேலே
எவர்க்குமிறைமையெய்திட்ட ஏந்தால்சிற்றில்சிதையேலே (10)

சிற்றிற்பருவம்—சிறுமகளிர் கட்டிவிளையாடும் சிறுவீட்டையழிக்கப்புகும். விளையாட்டுப்பருவம்—இது மூன்றும்வயதில் நிகழ்வது.

சிற்றிற் பருவம்
முற்றிற்று.

## பத்தாவது
## சிறுதேர்ப் பருவம்

பொருவரியமேருவொருதவராக வாசுகிப்போகிவரிநாரியாகப்
புணரிவணராசுகமதாக மதுமலர்மேவுபுனிதர்தனிவலவனுகச்
சுருதிநிரைபரியாக நிறுவுநிலரதமூதுதொகுமவுணர்புரமெரியவே
தூண்டியருள்தூண்டாதசோதிநுதல்விழியினருள்தோன்றலிற்றோன்
றுதோன்றல்
மருவமரினேற்றவொருநூற்றுவரொடேனையரின்மாமகுடகோடியிடற
வலசாரியிடசாரியிவுளிவர விசயனொருவயமூர்ந்தவலவனூர்தம்
திருமருகவரிகேசபுர முருகவரதகுக சிறுதேருருட்டியருளே
திணைகாக்குமிளமயிலைமனையாக்கு மழகனேசிறுதேருருட்டியருளே
(1)

அம்பவளவடிவருணிரம் பிட்ட திருமேனி யழகுறச் சிறிதுகவிழ
அலர்க்கமல மண்டலமெனப்புகலு மானனத்தரிது குறுவியர் வரும்பப்
பம்புகருணைக்குரிய நிலயமெனு நயனங்கள் பாங்கொடு படர்ந்து செல்லப்
பங்கப்படாதுவளர் தளிமகளினத்தங்கை பண்புறச் சிவந்து காட்ட
நம்பங்குளப்படி வரிதையாம்பரத்து நித நடமாடுகின்றசெய்ய
நளினங்கள் குறுநடையிறள்ளாட வெம்மனோர் நனிமகிழ்வினினிது மூழ்கச்
செம்பருதி நுழைசோலை சூழரிகை வாசனே சிறுதேருருட்டியருளே
தினைகாக்கு மிளமயிலை மனையாக்கு மழகனே சிறுதேருருட்டியருளே (2)

வேகமொடு விரைகின்ற கால்களவை காலாக மேன்முகடுசென்னி யாக
விளங்கணி துளங்குமிருபாங்கெலாம் பாங்கினணி மேவுறு முறுப்பதாக
வாகைபெறு பாகனொரு மனனுக வைம்பொறிகள் வாவல் தருவாசி யாக
வடிகொண்டபுந்திநெடு மூட்டாகவுள்ள மேமாமலர்த் தவிசதாகச்
சோகசுகமென்கின்ற படுகைதிடர் நெறியெலாம் துருவிப்படர்ந்து சுழலத்
தொன்மையின்விடாதுபகிரண்டகோடிகளெலாந்தோற்றமுறு சீவவர்க்கத்
தேகரதமேலுலவு மரிகைநகர் வேலவா சிறுதேருருட்டியருளே
தினைகாக்குமிளமயிலை மனையாக்குமழகனே சிறுதேருருட்டியருளே (3)

அருணன் துரக்குமொளிர் இரதத்தினொருசகட மகல்வானி னெறியிடத்தும்
ஆகண்ட லக்குரி சிலாணைப்பெருந்திகிரியமைய மூன்றுலகிடத்தும்
இருணடுங்கவுணக்குலப்பதகர் முடியெலா மிரணகள மீதுமவர்தம்
ஏழையர்கணூ விழுந்திட்டவர்கள் சோபமுடனெம்மறு கிடத்துமுருள
தருணத்தினினது திற னிலைநோக்குசூர்தனது தாரையொளி நீங்கியிருளத்
தகைவிலவனுள்ளமும்மருளவொருகடவுணீ தானேயெனத்துணிவுறுந்
தெருணங்கிடத்தேரையன்றுகளனூர்ந்தவா சிறுதேருருட்டியருளே
தினைகாக்குமிளமயிலை மனையாக்குமழகனே சிறுதேருருட்டியருளே

செக்கச்சிவந்திட்ட தெய்வதப்பிம்பமே தேவர்தொழுஜெயதம்பமே
தெவிட்டாத பேரின்ப ஞானமயபானமே சிவசத்திசந்தானமே
கைக்கெட்டுமெற்கினிய தானகருவூலமே கலியுகத்தருட்கோலமே
கற்பனைகடந்திட்ட வற்புதக்காட்சியே காண்பரிய வொருசாட்சியே
பக்கத்திரண்டலர்க்கொடிபடரொர்தாருவே பகரரியமகமேருவே
பரமவணுவினினுணுகு வான்மனுதீதமே பரவுவார்க்கருட்போதமே
திக்கற்றவர்க்கினிய துணையானதெய்வமே சிறுதேருருட்டியருளே
தினைகாக்குமிளமயிலைமணையாக்குமழகனேசிறுதேருருட்டியருளே
(5)

அளிநாடிவரிபாடுமலர்தந்தநீபனே அவுணர்தங்குலகோபனே
அருமாயவிருளகலவொளிர்ஞானதீபனே அகிலமொளிர்தருசோபனே
ஒளிதாங்கியாரவுணருயிர்வாங்குவேலனே உமையருளினருள்பாலனே
ஓரிருமடந்தையரிடந்தழுவுலோலனே யும்பர்குல பரிபாலனே
தளியாகவடியருள நிலையானநாதனே சதுமறைக்குயர்பாதனே
சருவமயமாவிலகு சேதனசேதனே சாற்றுறுகுணதீதனே
தெளிவானசெந்தமிழலங்கலணிதோளனே சிறுதேருருட்டியருளே
தினைகாக்குமிளமயிலை மணையாக்கு மழகனே சிறுதேருருட்டியருளே
(6)

ஈராறுகண்ணனே எழுதரியவண்ணனே எரியினொளிர்தருவண்ணனே
எங்களொருசேயனே எழில்கார்த்திகேயனே ஏற்றவரமருள்வாயனே
ஏராருசேந்தனே யிருமகளிர்காந்தனே இயம்பரியநாதாந்தனே
எதிரில்சுர ரீசனே யெமதிதயவாசனே இழிதகுவர் குலநாசனே
பாரார்ந்தகந்தனே பணிதமிழ்ச்சந்தனே பலர்பரவுபிரபந்தனே
பகர்தருவிசாகனே பரமபதபோகனே பரப்பிரமமாமேகனே
சீரார் நற்றுதியனே திவ்யகதிநிதியனே தேவசேனுபதியனே
தினைகாக்குமிளமயிலை மணையாக்குமழகனே சிறுதேருருட்டியருளே.
(7)

மண்டலமதிற்படிவர்கைகண்ட வரதனே வரமவர்க்கருள் விரதனே
மான்மருகனனவடிவேன் முருகனே யுந்துவாகனமயிற்குருகனே
தண்டமிழகத்தியர்க் கன்றருள்செய் குழகனே தனைநிகரில்வடிவழ
கனே
சாற்றரியமேருவாயணுவான தேவனே சரவசரமுறு ஜீவனே

பண்டைமறைமுடி தாண்டி நின்றருளிசெய்தாளனே பைங்கொடிகள் படர்தோளனே
பரமகருணை நிதியமானவறுமுகவனே பரசுகுருவாம்பகவனே
தெண்டிரைக்கடலோடு மலைநாடு சிலனே சிறுதேருருட்டியருளே
தினைகாக்குமிளமயிலை மனையாக்குமழகனே சிறுதேருருட்டியருளே

(8)

மைவந்தொதுங்கு தென்பொதியாசலத்துநிலை வருகின்றபொருநைவளனும்
மற்றதன்கால்வளனும் அதுபாயவிளைகின்ற மணிகுரற்சாலிவளனும்
பைவந்தபாம்பலங்காரவரிகேசரொடு பாவைபிரகன்னாயகி
பயில்கின்றசினகரச் செவ்வியும் நால்வேதபாரகர் விளங்குமறுகின்
மெய்வந்தகாட்சியுங் கைவந்தகலைவாணர் மேன்மேறழைக்குமழகும்
விரிதரவிரித்திடற் கரிதெனும்புலமைகூர் மேலவர்குழாங்களும்
தெய்வந்தழைக்கு மரிகேசபுரவாசனே சிறுதேருருட்டியருளே
தினைகாக்குமிளமயிலை மனையாக்குமழகனே சிறுதேருருட்டியருளே

(9)

புகழுஞ்சிலைக்கை வனவேடர் கன்னிச்சிறுமி பூர்த்திபெறு மார்த்திமயலால்
பொற்பினிய நுட்பத்தினட்பிற் பொறித்திட்ட பூம்புதியவோவியம்மே
நிகழ்கின்றதவயோகர் அந்தரங்கத்தினிடை நிலைபெற நினைப்பினிறுவு
நிறைகருணை யோருருவமெனநிலவுவடிவமே நீரசமுதற்புகல்தரும்
பகழிதொடு வோனுமோர் பெண்டன்மை விழையுநின் பரமரூபாக்ருதியெலாம்
படிகப்பரப்பிற்றெரி பிரதி பிம்பமே பகரினுமறியகிழியிற்
றிகழரிகையிற் பசனகூடமொளிர்செல்வனே சிறுதேருருட்டியருளே
தினைகாக்கு மிளமயிலைமனையாக்கு மழகனே சிறுதேருருட்டியருளே

சிறுதேர்ப்பருவம் ——சிறிய கைத்தேரை உருட்டிவிளையாடும்பருவம். இது நாலாம் பிராயத்தில் நிகழ்வது.

சிறுதேர்ப்பருவம் முற்றிற்று.



விளம்பரம்.




விளம்பரம்.

அநித்தியமான இம்மானிட தேகத்துக்கு நேரிடும் பலவிதநோய்களுக்கென்று மகிமைதங்கிய கருணானந்த ரிஷியால் அருளப்பட்ட அவிழ்தங்களில் சிலவற்றை ஜீவகாருண்யத்தின் பொருட்டு சகலரும் அனுபவித்து சுகமடையக்கருதி, ஒன்றிருக்கஒன்றுசெய்தல், பத்தியம் பிசகில் மோசம் செய்தல், நம்பிக்கை யில்லாமை என்னும் மூவகைக் குற்றமும் நீங்க, அரும் பிரயாசத்துடன் தயார்செய்து, சொற்பவிலைக்கு வெளியிட்டிருக்கிறோம். இவைகளின் அனுபவந்தெரிந்த எமதன்பர்கள் எமது பிரயாசங்களைக் கவனித்து, துணைநின்று ஆதரிக்கப்பணிவுடன் பிரார்த்திக்கின்றோம்.

| இப்போது தயாராயிருக்கும் அவிழ்தங்களாவன:— | | | ரூ. | அ. |
|---|---|---|---|---|
| பியூபானிக் கொள்ளை நோய்க்குச் சிறந்த கருணானந்தர் செந்தூர சஞ்சீவி மாத்திரை சீசா ஒன்று | | | 2 | 0 |
| ௸ | சஞ்சீவிமாத்திரை ... | ௸ ... ... | 0 | 10 |
| ௸ | சமய சஞ்சீவி ... | ௸ ... ... | 0 | 8 |
| ௸ | மஹா கோரோஜனை மாத்திரை | ௸ ... ... | 0 | 12 |
| ௸ | ஆக்ராண சஞ்சீவி ... | ௸ ... ... | 0 | 5 |
| ௸ | ஜீவாதார சஞ்சீவி செந்தூரம் | ௸ ... ... | 2 | 8 |
| ௸ | சாரீர சஞ்சீவிமாத்திரை | ௸ ... ... | 1 | 0 |
| ௸ | காரமாத்திரை ... | டப்பி ஒன்று ... | 1 | 0 |
| ௸ | அமிர்த சஞ்சீவி லேகியம் | ௸ ... ... | 2 | 8 |
| ௸ | தாது புஷ்டிலேகியம் ... | ௸ ... ... | 2 | 8 |
| ௸ | ஸ்தம்பன மெழுகு ... | ௸ ... ... | 1 | 8 |
| ௸ | மேகரணக் களிம்பு ... | ௸ ... ... | 1 | 0 |
| ௸ | தீபனசஞ்சீவி லேகியம் ... | ௸ ... ... | 1 | 0 |
| ௸ | தந்த சஞ்சீவி சூரணம் ... | ௸ ... ... | 0 | 5 |
| ௸ | சஞ்சீவி தைலம் ... | ௸ ... .. | 1 | 0 |
| ௸ | ஜீவாதார சஞ்சீவி லேகியம் | ௸ ... ... | 2 | 8 |

இவைகள் ஒவ்வொன்றில் 10-க்கு மேல் வாங்குபவர்களுக்கு 10-க்கு ஒன்று வீதம் சேர்த்துக் கொடுக்கப்படும். பலதினுசுமாக 10 ரூபாய்க்கு வாங்குபவர்களுக்கு 1 ரூபாய் கழித்துக்கொடுககப்படும்.

கருணானந்த சஞ்சீவி மருந்துகளில் அனுபோகமுள்ள நண்பர்கள் பேதம் தெரிந்துகொள்ளும்படியாகக் கேட்டுக்கொள்கிறோம்.

ராவ் சாஹேப் மு. ஆபிரகாம் பண்டிதர்,
கருணாநிதி வைத்தியசாலை,
தஞ்சாவூர்.